காண்டம்.
வைத்தூர்த்தார்கள். அதனால் உலகிற்கு மேதினியென ஓர் பெயருண்டாக; அது இருகுமாறு பிரமதேவர் பிரார்த்தித்தலும் எம்பெருமான் அளவிலாக் கொடுமுடிகளையுடைய முதுகிரியாய் நின்றனராகலின் "பல்வேறாழி-யிடையுற முன்னும்பின்னுமிருக்குமிக்குன்று" என்றாரென்க. இதில் சுவாமிதிருநாமம்-பழமலைநாதர், தேவிதிருநாமம்-பெரியநாயகியம்மை. இச்சரித்திர விரிவுகளைத் தலபுராணங்களுட் காண்க.

அவுணரிற்கள்வனைவந்தகற்காய்ந்துமூன்று
புவனமுங்கவலைதீர்த்தபுண்ணியன்புரமீதாகும்
தவலரும்புரங்கண்மூன்றுந்தழனுதற்றிருக்கண்சாத்திப்
பவமறுமூவரன்பிற்பட்டவன்பதியைக்காண்மின். (கசு)

இரணியாக்கன் புதல்வனாகிய அந்தகாசுரன் பிரமதேவராற் பெற்ற வரத்தினாலும் சிவபூஜாபலத்தினாலும் செல்வச்செருக்குடையனாய்த் திருமாலாதிதேவர்களைப்புறங்கண்டு, அவர்கள் மகளிர்போல ஆடையணிமுதலிய அணிதலுடையராய் ஏவல்புரியக்கற்பித்து, இடுக்கண்விளைக்க; ஆற்றாத்தேவர்கள் திருக்கைலையையடைந்து, அவ்வுருவாகவேயிருந்துகொண்டு, அம்பிகையினேவலை இயற்றியிருந்தனர். அதையுணர்ந்த அசுரன்முனிந்து, சேனைகளோடுவளைதலும், அம்பிகையருள்பெற்றுத் திருமாலாற்படைக்கப்பட்ட நூறுசத்திமார்களைதிர்த்து, அவனைப் புறங்கண்டுமீள; ஓடிய அவன் மீட்டும் வெல்லவிரும்பிவருங்கால் திருக்கோவலூரென்னும் இத்தலத்தே பெருமான்வைரவக்கடவுளைவிடுத்துழி அவராலழிந்தசேனைகள் அசுரகுருவாகிய பார்க்கவனால் மிருதசஞ்சீவினியின் உயிர்பெற்றெழுதல் கண்டு, அப்பார்க்கவனைத்தமதுஉதரத்திலொடுங்கும்படிஉட்கொண்டிருந்தனர். அப்பொழுது வைரவக்கடவுள் அவ்வந்தகனைச்சூலத்திற்குத்தி, சூரியமண்டலமளவும் உயர்த்தி, வெயிலில் வாட்டலும், அவன் வாடி அறிவுமுதிர்ந்து துதிக்க; பெருமான் அவனைச்சூலத்தினிறக்குவித்து நந்திகணத்தலைவனாக்கி, பார்க்கவனையும் தமதுசுக்கிலத்தோடுந்தோய்ந்திருந்தமையால் சுக்கிரனென ஒளிவிட்டுவிளங்க வெளியேவிடுத்தருளினாராகலின், "அவுணரிற் கள்வனை வந்தகற் காய்ந்துமூன்று-புவனமுங் கவலைதீர்த்தபுண்ணியன் புரமீது" என்றாரென்க. இதில் சுவாமி திருநாமம்-வீரட்டானேசுரர், தேவி திருநாமம்-சிவானந்தவல்லியம்மை.

சூரபத்மனது தம்பியாகிய தாரகனுக்குப்பிறந்த தாரகாக்கன் கமலாக்கன் வித்துன்மாலி யென்னு மூவரும் கோடிவருடம் தவம்

புரிந்து, பிரமதேவரால் பொன் வெள்ளி இரும்புகளாலாகிய மூவ ரண்கள் முறையே சுவர்க்கம் அந்தரம் பூமியென்னுமிடங்களில் நிலை பெற்றிருந்து வேண்டு மிடங்கட்கு உடன்வரவும், அவை ஆயிரம் வருடத்திற்கொருமுறை ஒரு முகூர்த்தநேரம் ஒருங்கு சேரவும், அக்காலத்திலே ஒருகணைவிடுத்து அழித்தாலன்றி வேறு எவ்வகை யாலும் அழியாதிருக்கவும், திருமாலாதிய ரெதிர்க்கில் தோற்றோட வும் வரம்பெற்று, மயனால் வகுக்கப்பட்ட மாளிகைகளோடுகூடிய அவ்வரண்களிலிருந்துகொண்டு, விபூதி ருத்திராக்ஷதாரணங்களும் பஞ்சாக்ஷர செபமுமுடையோராய் பெருமானை விதிப்படி பூசித்து வந்தார். இங்ஙனமிருந்தும் அசுரகுலத்துதித்தமையால் தேவர்க ளுக்கு இடுக்கண்களையே யியற்ற ; திருமால் புத்தகுருவாய்ச்சென்று நாரதரைக்கொண்டு அவ்வசுரர் மனைவியர்களின் கற்பையழித்தது மன்றித் தாம் சிவபூசை முதலியவற்றால் பயனில்லையெனப் போதி த்து, அவரைச் சிவபத்தியில் வழுவுவித்து, திருக்கைலையையடைந்து, பிரான் கட்டளைப்படியே பூமிமுதலிய தெய்வீகப்பொருள்களை யெல்லாம் இரத முதலிய உறுப்புக்களாக்கி, தாம் பாணமாயினர். அண்ணலார் பிரமதேவராற் செலுத்தப்பட்ட அவ்விரதத்திலெழுந் தருளி, திருவதிகை யென்னும் இத்தலத்தை யடைந்துழி, அம்மூவ ரண்களும் ஒருங்குசேருங்காலம் சமீபித்தலால் தொகுதலும், அவற் றில் சிவபத்தியின் வழுவியுள்ளார் நிலையைக்கண்டு, புன்முறுவ லரும்ப, அதிற் றோன்றியகனலால் அம்மூவரண்களும் வெந்தழிய வும், சிவபத்தியின் முதிர்வால் அழிவின்றியுய்ந்த சுதன்மன் சுசீலன் சுபுத்தியென்னு மூவர்க்கும் திருவருள்பாலித்து, வாயிற் காவலளித் தாராகலின், "தவலரும் புரங்கண்மூன்றுந் தழனுதற் றிருக்கண் சாத்திப்-பவமறு மூவரன்பிற் பட்டவன் பதி" என்றாரென்க. திரி புரமெரித்தது திருப்புன்முறுவ லக்கினியேயாயினும், அவ்வக்கினிக் குரியதானம் நுதற்கண்ணேயாதல் பற்றித் தழனுதற் றிருக்கண் சாத்தியென உபசரித்தார். இதில் சுவாமி திருநாமம்-திருவதிகை நாதர், தேவி திருநாமம்-திருவதிகைநாயகி. இச்சரித்திர விரிவுகளை உபதேசகாண்டம் கூர்மபுராணம் இலிங்கபுராண முதலியவற்றும் தலபுராணங்களுள்ளும் காண்க.

சத்தியஞானானந்ததத்துவமசைவற்றாடு
நித்தியபரமானந்தநிறையருண்மன்றமீது
முத்தியங்குதித்தோரெய்தும்பதியது முதனூனன்கும்
பத்தியிற்பூசித்தேத்தும்பதியிதுவாகும்பார்மின். (௧எ)

காண்டம்.

சச்சிதானந்த உண்மைப்பொருளாகிய சிவம் ஆன்மாக்களுக்கு இருவினை யொப்பாக்கி மலபரிபாகம் வருவித்தற்பொருட்டுத் தனு கரண புவனபோகங்களைத்தந்து, அவற்றையசைத்து நிற்பினும், தாம் அசைவற்றவராய் விளங்கி, தமது திருமேனியிலே பஞ்சகிர்த்தியங்களும் நிகழ எக்காலத்தும் அழிவில்லாத பரமானந்த நிறைவாயுள்ள திருவருட்சத்தி மயமாகிய சிதம்பரமெனப்படும் திருவம்பலத்திலே திருநிருத்தஞ் செய்தருளுதலால், "சத்திய ஞானந்த தத்துவமசைவற்றாடு-நித்தியபரமானந்த நிறையருண் மன்றமீது" என்றாரென்க. இதனை "இருவருங்காண வெழிலம்பலத்தே-யுருவோடருவோ டுருபா ரூபமாய்த்-திருவருட்சத்திக்குள் சித்தனானந்தனருளுருவாகநின்றாடலுற்றானே." என்னும் திருமந்திரத்தானும், திருமேனியிற் பஞ்சகிர்த்திய நிகழுதலை "தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்-சாற்றரிய வங்கியிலே சங்காரம்-ஊற்றமா, யூன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி-நான்ற மலர்ப்பதத்தே நாடு" என்னும் உண்மைவிளக்கத்தானும் உணர்க. இதில் சுவாமி திருநாமம்-சபாநாயகர், தேவி திருநாமம்-சிவகாமியம்மை.

திருவாரூர் தன்னிடத்தே உதித்தோரை மீட்டும் அவனியிலுதியாவண்ணம் முத்தியிற்சேர்ப்பதாகலின், "உதித்தோர்முத்தியெய்தும்பதியிது" என்றாரென்க. இதில் சுவாமிதிருநாமம்-வன்மீகநாதர், தேவி திருநாமம்-அல்லியங்கோதையம்மை.

வேதாரணியமென்னும் தலம் எந்நூற்கும் முன்னூலாகிய வேதங்கள் பூசித்து இஷ்டசித்தி யடைந்ததாதலின், "முதனூனான்கும் பத்தியிற்பூசித்தேத்தும் பதியிது" என்றாரென்க. இதில் சுவாமி திருநாமம்-மறைக்காட்டீசர், தேவி திருநாமம்-யாழைப்பழித்தமொழியம்மை. இச்சரித்திர விரிவுகளைத் தலபுராணங்களுட்காண்க.

பிரமன்மான்முதலாந்தேவர்பிரளயத்திறவாவண்ணம்
பரமனார்தோணியேற்றும்பன்னிருநாமம்பெற்ற
புரமிது சடாயுசம்பாதிகள்பெரும்பூசைசெய்ய
வரமளித்திருணோய்தீர்க்குமருந்துறைபதியீதாகும். (௧௮)

உலகமுற்றும் அழியச் சமுத்திரசலமூடிய மகாப்பிரளயத்திலும் தானழிவின்றிவிளங்கி,பிரமவிஷ்ணுவாதிதேவர்களும் பிறரும் அழியாதபடிப் பெருமான் தோணியி லிவர்வித்துப் புரந்ததானமாய், பிரமபுரம் வேணுபுரம் புகலி வெங்குரு தோணிபுரம் பூந்தராய் சிரபுரம் புறவம் சண்பை காழி கொச்சைவயம் கழுமலமென்னும் பன்

னிரு திருநாமங்களைக்கொண்டு விளங்கலின், "பிரமன்மான்முதலாந் தேவர்பிரளயத்திறவாவண்ணம் - பரமனூர் தோணியேற்றும் பன்னிருநாமம் பெற்றபுரமிது" என்றாரென்க. இதில் சுவாமி திருநாமம்-பிரமபுரீசர்; தேவி திருநாமம்-திருநிலைநாயகியம்மை.

அருணன்புதல்வராகிய சம்பாதி சடாயுவென்பவர் முத்திநெறியைவேண்டிச் சிவபெருமானைவணங்குதற்குத் திருக்கைலையிலேறிச் செல்லுங்கால், நீவிர் எங்ஙனம் வழிபடுவீரெனத்தடுத்த சிவகணங்களைப்பணிந்து, "யாங்கள் ஞானமடையும்படி இறைவரைவணங்குதல் மேலேபறந்துவட்டமிடுதலே" என்றுகூறி, அவருணர்த்தியவாறே சூரியமண்டலத்துக்கு அணித்தாகப் பறந்துசென்றமையால், சிறைகருகுதலடைய; ஆற்றலிழந்து சடாயு இத்தலத்திலுள்ள மந்திரகுண்டத்தில்விழுந்து முன்னையவடிவம்பெற்றும், சம்பாதி விந்தியமலையில் விழுந்துவந்தும் முறையே வழிபட; அவர்க்கு வேண்டியவரமளித்து, ஏனை ஆன்மாக்களுக்கும் உடற்பிணியையொழித்தலன்றி உயிர்க்குரிய அந்தகாரமாகிய மலப்பிணியையும் ஒழித்தலின் "சடாயுசம்பாதிகள் பெரும்பூசைசெய்ய வரமளித்திருணோய்தீர்க்கு மருந்துறைபதியீது" என்றாரென்க. இதில் சுவாமி திருநாமம்-வைத்தீசுரர்; தேவி திருநாமம்-தையனாயகியம்மை. இச்சரித்திர விரிவுகளைத் தலபுராணங்களுட்காண்க.

மதிநுதலிமயச்செல்விமஞ்ஞையாய்வழிபட்டேத்து
மிதுதலாப்பொன்னித்தானம் எம்மனோர்மூன்றுகோடி
மதிபெறுமுனிவர்வந்துவழிபடுமூதூரீது இப்
பதியறக்கடவுள்பூசைபண்ணியதானங்காண்மின். (௧௯)

சிவபெருமானைவழிபடுதலின்றித் தக்கனியற்றிய வேள்வியைக் காண உமாதேவியாரடைந்தபொழுது, அவன் உபசரியாமைகண்டு வருந்தி, அவன்பால்வளர்ந்ததேகம் ஆகாதெனஅதனைவிடுத்து,சூக்குமவுருக்கொண்டணுகலும் அண்ணலார்நோக்கி, "நீநின்மேனியைவிடுங்குங்கால் ஒருமயில் நின்பால் இனமென்றடைய அதன்பாதுகாப்பிற் கருத்தைச்செலுத்தினையாகலின், அவ்வுருக்கொண்டு வழிபடக்கடவாய்; யாமும் ஆண்மயிலுருக்கொண்டு அங்கணுகுவோம்" என்றனுக்கிரகிக்க; அங்ஙனமே மாயூரமாயடைந்து வழிபட்டு வேண்டிய வரங்களைப்பெற்றமையால் இத்தலம் மாயூரமெனப்பெயர்பெற்றதாக; பின்னொருகாலத்திலே, பெருமான் அண்டங்களைநோக்கியருளும் அருள்விளையாட்டை மேற்கொண்டு திருமாலாதியர்புடைசூழ இடபவாகனத்தெழுந்தருளுங்கால், அவ்விடபம் ஏனைவாகனங்

காண்டம்.

களெல்லாம் வேகங்குன்றும்படி விரைந்து, இத்தலத்திற்கு நேரே வந்திறுமாத்தலை இறைவரறிந்து, திருவிரலாற் சிறிது ஊன்றலும், அது பாதலத்தழுந்திப் பிரார்த்திக்க; திருவருள்பாலித்து, காவிரியி னடுவே மேலெழுவித்து, "இது இடபதீர்த்தமெனப்பெயர்பெறும்; இங்கே மேற்றிசை நோக்கி ஸ்நானஞ்செய்வோர்க்கு வேண்டும் வரங்களைத்தந்து, ஓரம்சத்தில் விளங்குவாயாக ; இதில் துலாரவி யில் அமாவாசையில் எல்லாத்தீர்த்தங்களும் வந்துமூழ்கும்; யாமும் உத்தரதிசையில் மூளைத்தருளி நின்வேண்டுகோளின்படி நினக்கு ஞானோபதேசம் பாலித்தருள்வோம்" என்றருளி, அவ்வண்ணமே அநுக்கிரகித்தாராகலின் "மதிநுதலிமயச்செல்விமஞ்ஞையாய்வழி பட்டேத்து-மிது துலாப்பொன்னித்தானம்" என்றாரென்க. துலாப் பொன்னித்தானம்-துலாரவியில் மூழுகுவோர்க்கு இஷ்டசித்திகளை யளிக்கும் காவிரித்தீர்த்தத்தையுடையதலம். இதில் சுவாமிதிரு நாமம்-மாயூரநாதேச்சுரர்; தேவி திருநாமம்-அஞ்சனாயகியம்மை.

அகத்தியமுனிவர் பலதலங்களையும்வணங்கி, திருக்கோடிகா வையடைந்து, தினமும் சிவபிரானைப்பூசித்து வசிக்குநாளில், அங் குள்ள பெரியோரைத் தாம்பணிதலின்றி ஏவல்கொண்டதுமன்றி, கற்பிற்சிறந்த மனைவிவாய்க்கப்பெற்று நம்போற்சிறந்தவரில்லை யெ ன்னும் செருக்கையுமுடையராகி, ஒருநாள் சிவபிரானைப்பூசிக்க ; அக்கடவுள் அவர்செருக்கையடக்கத் திருவுளங்கொண்டு, அச்சிவ லிங்கத்திலே முக்கோடி அகத்தியமுனிவர் மனைவியரோடு விரை யத்தோன்றி அதைப்பூசித்து அதிலேமறையும்படி ஒருபுதுமையைக் காட்டியருளினாராகலின், "எம்மனோர் மூன்றுகோடி - மதிபெறுமு னிவர்வந்து வழிபடுமூதூரீது" என்றாரென்க. ஒரு கோடிமுனிவர் தோன்றி வழிபட்டொதுங்கினரென்பது திருவாவடுதுறைப்புராண மாகலின், இங்ஙனம் மும்முறை யுதித்தொடுங்கியிருக்கலாம்போலும் இதில் சுவாமி திருநாமம்-கோடீச்சுரர்; தேவி திருநாமம்-வடிவாம்பி கையம்மை.

சோமுகாசுரனென்பவன் பிரதேவரிடத்திருந்த வேதங்களைக் கவர்ந்துகொண்டு கடலில் ஒளித்தபோது, உலகில்வருணச்சிரமதரு மங்களும் உண்மைநெறியுபதேசிக்கும் ஆசிரியருமின்றி, யாவரும் மாழ்கியிருத்தலை அவ்வேதத்திலுதித்ததருமதேவதைநோக்கி,அல்ல லுற்று, திருக்கைலையில் திருநந்திதேவர்கட்டளையிட்டபடி அந்தண வுருக்கொண்டு திருவாவடுதுறையையடைந்து, சிவபெருமானைவழி பட; அப்பெருமான் அதன்பிரார்த்தனைப்படி அச்சோமுகனை விஷ்

ணுமூர்த்தியாலழித்து, வேதங்களைப்பரப்பியதன்றி அத்தருமதேவ தையையும் என்றும் இடபவாகனமாகக் கொண்டருளினராகலின் " இப்பதியறக்கடவுள்பூசைபண்ணியதானம்" என்றாரென்க. இதில் சுவாமிதிருநாமம்-மாசிலாமணியீசுரர்; தேவி திருநாமம்-ஒப்பிலாமுலையம்மை.

அன்றி, மார்க்கண்டேயமுனிவரைப் பற்றத்துணிந்தமையால் உதையுண்டுமாண்டு உயிர்பெற்றெழுந்த இயமன் அவ்வபராதமகல மாயூரத்தின் ஈசானதிக்கில் ஒருசிவலிங்கந்தாபித்துப்பூசித்துமூர்த்தி தலம்தீர்த்தமென்னும் மூன்றும் முறையே தருமலிங்கம் தருமபுரம் தருமதீர்த்தமெனத் தன்பெயரால்வழங்கப் பெற்றமையின், அறக்கடவுள் பூசைபண்ணியதானம் அத்தருமபுரமெனவும் கூறுவர். இச்சரித்திரவிரிவுகளைத் தலபுராணங்களுட்காண்க.

கோடுநான்குடையவேழந்தானவன்குறைத்தகோட்டைப்
பாடறநோற்றுப்பெற்றபதியிது மாலைசாத்துந்
தாடகைமானங்காப்பான்றாழ்ந்துபூங்கச்சிட்டீர்க்கும்
பீடுறுகலையனன்பினிமிர்ந்தவெம்பிரானூரீதால். (உ0)

பானுகோபன் எதிர்த்துப்பொருங்கால், சயந்தன்மூர்ச்சித்தல் கண்டு: அவனூர்ந்தஐராவதம் அப்பானுகோபன்மார்பிற்றாக்கலும் நான்குகொம்புகளும் முறிபட; அவனாற் கன்னத்திலும்புடைக்கப்பட்டு மூர்ச்சித்துத்தெளிந்து, பின் அப்பானுகோபன் சயந்தனைத் தேவர்களோடு சிறைப்படுத்தியதுணர்ந்து கவன்று இத்திருவெண்காட்டையடைந்து, இறைவரைவழிபட்டு, அக்கோடுகள்நான்கும் வளரப்பெற்றதாகலின், " கோடுநான்குடையவேழந் தானவன்குறைத்தகோட்டைப்-பாடறநோற்றுப்பெற்றபதியிது" என்றாரென்க. இச்சரித்திரவிரிவைக் கந்தபுராணம் அமரர்சிறைபுகுபடலத்துணர்க. தானவன் ஈண்டுப்பானுகோபன்.

தாபதன்குறைத்தகோடென்பதுபாடமேல், இந்திரன் பவனிவருங்கால், துர்வாசமுனிவரனுகிக் கையுறையாகநல்கிய சுவர்ண மாலையைவாங்கி, அவன் ஐராவதத்தின்மேல்வைக்க ; அது புழைக்கையாலெடுத்துச் சிந்துதல்கண்டு, அம்முனிவர் அதனைக் காட்டானையாகவெனச்சபித்தனர். அங்ஙனமே இத்தலத்தையடைந்திருக்குங்கால் ஒருநாள், முற்கலமுனிவர்புதல்வராகிய சிவப்பிரியமுனிவர் பெருமானைப்பூசிக்க நீராடி ஆயிரம் தாமரைமலர்களைக் கொய்துவரும்பொழுது எதிர்ப்பட்டு, இருகோட்டாற்குத்துதலும், அவர் சோர்

**காண்டம்.**

ந்துவீழ்ந்தெழுந்து மலர்களைச் சேதமுறுமலெடுத்துச்செல்ல; அந்த யானை தன்கோடுகள் பஞ்சாக்ஷரசெபமுடைய அம்முனிவர்மார்பிற் பாயாது தன்வயிற்றினுள்ளே அழுந்தியதுகண்டுவருந்தி, முனிவரை வணங்கி, தன்பிழை பொறுத்தருளும்படிபிரார்த்தித்து, முனிவரருள்பெற்றுப் பெருமானைவழிபட்டு, அழுந்திய இருகொம்புகளும் எழ, நான்குகொம்புடையதாகி, விண்ணுலகடைந்ததெனஅத்தல புராணசரித்திரத்தைக் கொள்க. இவ்வபராதங்காரணமாகக் கோடுகள்குறையினும் அது முனிவர்காரணமாகநிகழ்ந்தமையின் தாபதன் குறைத்தகோடென்றாரென்க. அன்றிக் குறைந்தகோடெனமெலித்து மூன்றனுருபுவிரித்து, தாபதனாற்குறைந்த கோடென்னலுமொன்று. இதில் சுவாமிதிருநாமம்-சுவேதாரணியேச்சுரர்; தேவி திருநாமம்-பிரமவித்தியாநாயகியம்மை.

திருப்பனந்தாளில் தாடகையென்பவள் சிவபெருமானைப் பூசித்துவருநாளில், ஒருநாள், திருப்பள்ளித்தாமஞ் சாத்தும்பொழுது, இடையிலுள்ள ஆடைநழுவ, அதை இடுக்கமுயன்றும் நிலைபெறாமையின் கவலையுறுதலும், பெருமான் திருமேனிவளைந்து, மாலைபூண்டு வரந்தந்தருளி அங்ஙனமே, வீற்றிருந்தருள; அதுகண்டசோழர்குலக் குரிசிலார் அப்பெருமானை நிமிர்வித்துத்தரிசிக்கமுயன்று வருந்துவதைக் குங்குலியக்கலயநாயனாரறிந்து, அங்கடைந்து, பெருமான்திருமேனியில் பூங்கச்சும் தம்முடையகழுத்தில் அதைப்பிணித்தவலிய கயிறும் பூட்டி சிவபத்தியினுறைப்பால் வலித்தலும், பெருமான் அவரன்புக்கிரங்கி நிமிர்ந்தருளினாராகலின் "மாலைசாத்துந்-தாடகை மானங்காப்பான்றாழ்ந்துபூங்கச்சிட்டீர்க்கும்-பீடுறுகலயனன்பினிமிர்ந்தவெம்பிரானூரீது" என்றாரென்க. இச்சரித்திரவிரிவைப்பெரிய புராணத்தும் இத்தலபுராணத்துங்காண்க. இதில் சுவாமிதிருநாமம்-சடையப்பநாதர்; தேவிதிருநாமம்-பெரியநாயகியம்மை.

கரிமுகத்தவுணற்காய்ந்துகரிமுகத்தண்ணல்பூசை
புரிசிவநகரமீது தாரகற்பொருதுசெவ்வே
ளரனையர்ச்சித்தது ஆர்க்கீழ்மணற்குறியான்பாலாட்டிப்
பரன்முடிமாலைசூடுஞ்சேய்வளம்பதியீதாகும். (உக)

இந்திரனால் வலியிழந்த அசுரேந்திரன் தன்குலகுருவாகிய சுக்கிரனுணர்த்தியவாறு விபுதையென்னும் தங்குலப்பெண்ணை வசிட்டமுனிவர்மரபிற்றோன்றிய மாகதமுனிவரை யணையுமாறு விடுக்க; அவள் அவரது தவமுதிர்வுநோக்கித் தானும் அங்ஙனம் ஆகலால், அம்முனிவர் சித்தநெகிழ்ந்து, ஆண்யானையுருக்கொண்டு, பெண்யா

னையுருக்கொண்ட அவள்பாற் கலந்தனர். அக்கலப்பிலுதித்த கயமுகாசுரனென்பவன் எம்பிரானைக்குறித்து இருந்தவமியற்றி, எல்லையிலாத வரங்களைப்பெற்று, தேவர்க்கு இடுக்கண்விளைக்க; அத்தேவர் பிரார்த்தனைக்கிரங்கி, இறைவர் விநாயகக்கடவுளைத்தோற்றுவித்து, விடையளித்தனர். அக்கடவுள் அவனுறையும் மதங்கமாபுரியையடைந்து, அவனைத்தமதுகோட்டால்வதைத்தழி, அவன் மூடிகவுருக்கொண்டணுகலும் அதைவாகனமாகக்கொண்டருளி, அவனுதிரம்பாய்ந்ததால் திருச்செங்காடெனப் பெயர்பெற்ற அத்தலத்திலே கணபதீச்சரமெனவழங்க ஒருசிவலிங்கந்தாபித்துப் பூசித்தாராகலின், "கரிமுகத்தவுணற்காய்ந்து கரிமுகத்தண்ணல்பூசை-புரிசிவநகரமீது" என்றாரென்க. இத்திருச்செங்காட்டங்குடியில் சுவாமி திருநாமம்-கணபதீச்சுரர் ; தேவி திருநாமம்- திருக்குழலுயகியம்மை.

சுப்பிரமணியக்கடவுள் சூரபத்மனையழித்தற்பொருட்டு, வீரவாகுதேவர்முதலிய வீரர்களும் திருமாலாதியரும் புடைசூழத் திருக்கைலையினின்றும் எழுந்தருளி, கிரவுஞ்சகிரியையணுகி, அதனருகிலே மாயாநகரத்தில்வசிக்கும் சூரபத்மன்றம்பியாகிய தாரகனையழிக்குமாறு வீரவாகுதேவர்முதலியோரைவிடுத்தழி, அவர் அக்கிரவுஞ்சத்தின்மாயையால் மயங்கிக்கிடந்தமையின், தாம் வேலாயுதத்தையேவி, அவனையும் கிரவுஞ்சத்தையுமழித்து, மயக்கந்தீர்ந்தெழுந்த வீரவாகுதேவர்முதலியோருடன் மண்ணியாற்றங்கரையையடைதலும், சூரியன் அத்தமித்தானாக; அங்கே சேய்ஞலூரெனவழங்குமாறு தேவகம்மியனால் ஒரு அரியநகரமும் அதில் ஒரு ஆலயமும்வகுத்து, ஒரு சிவலிங்கந்தாபித்துப் பூசித்து, பாசுபதாஸ்திரம் பெற்றாராகலின், "தாரகற்பொருதுசெவ்வே-ளரனையர்ச்சித்தது" என்றார்.

இச்சேய்ஞலூர் இன்னும் எத்தன்மையதெனின், பிராமணகுலத்துதித்த விசாரசருமரென்பவர் ஒரு தினம் அத்தியயனசாலைக்கு அணுகுங்கால், ஓரிடையன் தன்மேற்கொம்போச்சிய ஒருபசுவைக் கோல்கொண்டோச்சக்கண்டு, இது அந்தோபெரும்பாவமென அயர்ந்து, அன்றுமுதல் அந்தணர்களின் ஆனிரைமுற்றும் தாமே தக்கவாறுமேய்த்துவரலும், அவைசெழிப்புற்றனவாகிப் பால்பெருகி,சென்றவிடங்களிலெல்லாம்பொழிய; அதுகண்ட விசாரசருமர் வீண்படும் இப்பால் திருமஞ்சனத்திற் காகுமெனச்சிந்தித்து, திருவாத்திமரத்தின்கீழ் பாவனையால் ஆலயமமைத்து, மணலால் இலிங்கந்தாபித்து, அப்பசுக்களின் பாலைக்கறந்து, திருமஞ்சனமாகஆட்டி, நறுமலர்கொண்டருச்சித்து வந்தனர். அங்ஙனம் ஒழுக; அதை அந்தணரறிந்

காண்டம்.

துமுனியக்கேட்ட எச்சதத்தனென்னும்பிதா ஒருதினம் மறைந்து றைந்து, திருமஞ்சனமாக ஆட்டுதலை நேரேகண்டணுகி, பாற்குடத் தைக்காலாலிடறலும், விசாரசருமர் அத்தந்தையைச் சிவாபராதியெ னத்துணிந்து, அருகிற் கிடந்ததொருகோலையெடுத்தவழி, அது மழுப்படையாக, அதனால் அவன்காலைத்துணித்து,தமது அருச் சனைத்தொண்டில் நிலைபெற்றனர். அவ்வமையத்தே பெருமான் பிர சன்னராகி "நம்பொருட்டுத் தந்தையையுமுனிந்தாயாகலின் இனி நாமே நினக்குத் தந்தை" என்றணைத்தருளித் தடவி, உச்சிமோந்து, உவந்து "யாமுண்டபரிகலமும் உடுப்பனவும் சூடுவனவும் உனக்கே யாக" எனச் சண்டேசபதவியையளித்து, தமது திருமுடியிலுள்ள கொன்றைமாலையைவாங்கித் தரித்தருளப்பெற்றாராகலின், இச்சி றப்பும் அமைந்த தென்பார் "ஆர்க்கீழ் மணற்குறியான்பாலாட்டிப் - பரன்முடி மாலை சூடுஞ்சேய்வளம்பதி" எனவிசேடித்தனரென்க. இதில் சுவாமி திருநாமம்-சத்தகிரீசர்; தேவி திருநாமம்-சகிதேவிநா யகியம்மை. இதின் முந்தியசரித்திரங்களைக் கந்தபுராணத்தும், பிந் தியதைப் பெரியபுராணத்துமன்றி, அவ்வத்தலபுராணங்களுள்ளுங் காண்க. சேய்நலூர் சேய்ஞலூரென்றாயது போலி.

கறுவிவீழ்காலன்மார்பிற்சேவடிக்கமலஞ்சாத்திச்
சிறுவனுக்காயுளீந்தசேவகப்பெருமான்மேய
வறைபுனற்பழனமூதூரது இதுவானைதந்த
குறையுடற்போர்வைபோர்த்தகொற்றவன்கோயில்காண்மின். (௨௨)

மார்க்கண்டேயமுனிவரென்பவர் தமது ஆயுளெல்லை பதினா றென்பதைப் பிதாமாதாக்களாலறிந்து, நீண்டஆயுளைப்பெறத் திருக் கடவூரையடைந்து,சிவபெருமானைப்பூசிக்குங்கால், ஆயுளெல்லை முடி வில்இயமனணுகிப்பாசம்வீச; அவ்விறைவர் அம்முனிவரன்புக்கிரங் கித் தோன்றி,அவ்வியமனையுதைத்து,என்றும் பதினாறு வயதுடைய ராக இருக்குமியல்பை அவர்க்குத் தந்தளித்தாராலின், "கறுவிவீழ் காலன்மார்பிற் சேவடிக்கமலஞ்சாத்திச்-சிறுவனுக்காயுளீந்த சேவ கப்பெருமான்மேயமூதூரது" என்றாரென்க. இதில் சுவாமி திரு நாமம்-அமுதகடேசர்; தேவி திருநாமம்-அபிராமியம்மை.

தாருகாவனமுனிவர் நாற்பத்தெண்ணாயிரவரும் அவரவரியற் றுங்கருமமே சுகதுக்கங்களை விளைத்தலின் கருமமே கருத்தாவென் னுங் கொள்கையுடையராய் மற்றைக்கடவுளரையிகழ; அவர்மனைவி யரும் யாம் கற்புநிலையில் மேம்பட்டோம் எம்மைநிகர்ப்போர் ஒருவ ரும் இன்றென எவரையும் அவமதித்து ஒழுகுதலால், அக்கொள்

கைவழி உலகங்கெடுவதுநோக்கி, பெருமான் அம்முனிவர்தவநிலையைச்சோதிக்கும்படி மோகினியுருக்கொண்டுசெல்லத் திருமாலுக்குப்பணித்து, தாம் திகம்பரராய்ப் பிக்ஷாடனவுருக்கொண்டு, அவர் மனைவியரிருக்கும் இடத்தையடைந்தனர். அடைதலும், அம்மங்கையரனைவரும் காதலித்து மயங்கி, கருவுடையராக; அதை அம்மோகினியான்மயங்கிய முனிவர்கண்டு, இச்செயல் சிவபெருமானால் நிகழ்ந்ததெனத்தேர்ந்து, ஆபிசாரவேள்வியொன்றியற்றினர். அதிற்றோன்றியயானை ஆர்ப்பரித்துச்சென்று, பெருமானை யெடுத்துவிழுங்க; அவர் அஞ்சற்கவென்று தேவர்க்கருளி அதனுடலைப் பிளந்துகொண்டு மேலெழுந்து, அத்தோலைப் போர்த்தருளினாராகலின், "ஆனைதந்த-குறையுடற் போர்வைபோர்த்த சொற்றவன்கோயிலிது" என்றாரென்க. முனிவரும் மனைவியரும் தாம்கொண்டகொள்கை வழுவியதானமாகலின், இது வழுவூரெனப்பெயர்பெற்றது. இதில் சுவாமி திருநாமம் - மாவுரிநாதேச்சுரர்; தேவிதிருநாமம் - வனமுலையம்மை. இச்சரித்திரவிரிவுகளைத்தலபுராணங்களுட்காண்க.

பங்கயக்கடவுளீந்தபரிகலம்வாங்கிக்கொண்ட
வங்கணனிடமீது ஆடலனங்கனையமுதுசெய்த
செங்கணனிருக்கையீது மேழகச்சென்னிதன்னை
மங்கலமாமற்கீந்தமருகனிருக்கைகாண்மின். (௨௩)

முன்னொருகாலத்திலே, பிரமதேவர் யாவுஞ் சிருட்டித்தலால் யானே இறைவனென்னலும், திருமாலணுகி, யாவும்காத்தலால் யானே இறைவனெனக் கலாம்கொண்டவழி, நான்குவேதங்களும் குடிலையுமடைந்து, நீவிர் இறைவரல்லீர் சிவபெருமானொருவரே இறைவர் என்றிசைத்தும், இருவரும் மாறுபட்டாராக; அதனையுணர்ந்த பெருமான் ஒளியுருவாய்த் தோன்றியருளினார். தோன்றியவழி, திருமால் ஒடியொளிக்க; பிரமதேவர்மாத்திரம் இறுமாந்து இகழ்ந்து நின்றமைகண்டு, தமதுகூற்றில் வைரவக்கடவுளைத்தோற்றுவித்து, அவரால் அப்பிரமதேவரின் ஐந்தலையுள்ளே இகழ்ந்த நடுத்தலையைக்கொய்து, பிக்ஷாபாத்திரமாகக்கொண்டு, திருக்கண்டியூரென்னும் இத்தலத்தே வீற்றிருந்தருளினாராகலின், அதனை உபசாரவழக்கால் "பங்கயக்கடவுளீந்த பரிகலம்வாங்கிக்கொண்ட - வங்கணனிடமீது" என்றாரென்க. இதில் சுவாமி திருநாமம்-வீரட்டேசர்; தேவிதிருநாமம்-மங்கைநாயகியம்மை.

தக்கன் தனதுதவத்தாலபுதல்வியாகத்தோன்றித் தாக்ஷாயணியெனப்பெயர்பூண்ட அம்பிகையைச் சிவபெருமானுக்குத் திருமண

காண்டம்.

முடித்துக்கொடுத்து, சிலதினமகன்றபின் ஒருதினம், திருக்கைலையையடைந்துழி, அப்பெருமான் தன்னை உபசரிக்கவில்லையென மாறுபட்டு, அப்பெருமானையிகழ்ந்து, திருமாலை யாகத்தலைவராகக் கொண்டு, ஒருயாகமியற்ற ; அப்பொழுது பெருமான் மறுக்கவும், அதனைநோக்கச்சென்ற உமாதேவியார் அவன் தம்மையும் உபசரியாது அவமதித்தமையின் முனிந்து, அது வீரபத்திரக்கடவுளால் அழியுமாறு சபித்துவிட்டு, அவன்பால்வளர்ந்த அத்தேகத்தைவிடுத்து, மலையரையனும் மேனையுமியற்றிய மவிதவத்தை முடிப்பான் அவர்க்குப் புதல்வியாகத் தோன்றி, பெருமானையடையப் பெரிதும் நோற்றொழுகு நாளில், சூரபத்மனுற்றன்புற்றதேவர்கள் இப்பொழுது திருக்கைலையில் சனகாதியர்க்கு ஞானோபதேசம்பாலித்து வீற்றிருக்கும் நம்பெருமான் தேவியாரைத் திருமணமுடித்தாலன்றிச் சுகம் பெறோமெனத் துணிந்து, அப்பெருமானுக்குக் காதன்மீதூருமாறு பாணங்களை யேவுதற்கு மன்மதனை விடுக்க; அவன் அங்ஙனமே பாணங்களைத் தொடுத்தலும், பரமர் நெற்றிக் கண்ணைத் திறந்து, அவனை நீற்றி, திருக்குறுக்கை யென்னும் இத்தலத்தே திகழ்ந்தாராகலின், "ஆடலனங்கனையமுதுசெய்த - செங்கணனிருக்கையீது" என்றுரெனக. இதில் சுவாமி திருநாமம்-வீரட்டேசர்; தேவி திருநாமம்-ஞானம்பிகையம்மை.

அம்பிகைசபித்தவாறே அண்ணலார் வீரபத்திரக்கடவுளைவிடுத்து, யாகத்தலைவராகஇருந்த திருமாலாதியரைத் தக்கவாறுதண்டித்து, தக்கன்றலையையுஞ்சேதித்து, பின்னர்ப் பிரமதேவர்வேண்டுகோளின்படி எவரையும் எழுப்புங்கால், அத்தக்கனுக்கு ஆட்டின்றலையைப்பொருத்தி எழுப்பியதுமன்றி, அத்திருமாலாதியர்பிரார்த்தனைக்கிரங்கி, "நீவிர் அறியாமையாலியற்றிய அபராதத்தைப் பறிசெய்தோமாதலால், இத்தலம் திருப்பறியலெனு ஒருகாரணப்பெயர் பெறுமெனவும் அருளினாராகலின், "மேழகச் சென்னிதன்னை-மங்கலமாமற்கீந்த மருகனிருக்கை" என்றுரெனக. இதில் சுவாமிதிருநாமம்-வீரட்டேசர்; தேவிதிருநாமம்-இளங்கொம்பம்மை. இச்சரித்திரவிரிவுகளைக் கந்தபுராணம் கூர்மபுராணமுதலியவற்றினும், தலபுராணங்களினும் காண்க.

திண்டிறலவுணன்றன்னைப்பெருவிரற்றீட்டுநேமி
யுண்டிட விருந்தாக்கொண்டோனுறையதாம் ஒருத்திமன்றல்
கண்டிடுகரியாய்க்கூவல்கண்ணுதலிலிங்கம்வன்னி
யெண்டிசையறியக்காட்டநின்றிடமிதனைக்காண்மின். (உச)

சலந்தராசுரனென்பவன் திருமாலாதியரைப் பன்முறைவென்று சிறைப்படுத்தியசெருக்கால் சிவபெருமானையும் வெல்லுமாறு அடைந்துழி, அப்பிரான் அந்தணவுருக்கொண்டணுகி, திருவடிப்பெருவிரலால் நிலத்திற்கீறிய திகிரியை எடுக்குமாறுபணித்து, சிரமேற்றாங்கியவுடன் அதனால் அவன் இருகூறாகப்பிளவுபட்டு மடியப்புரிந்து, திருவிற்குடியென்னும் இத்தலத்தே வதிந்தாராகலின், "திண்டிறலவுணன்றன்னைப் பெருவிறற்றீட்டுநேமி-யுண்டிடவிருந்தாக்கொண்டோனுறையிது" என்றாரென்க. இதில் சுவாமிதிருநாமம்-வீரட்டானேசர்; தேவிதிருநாமம்-மைவார்குழலியம்மை. இச்சரித்திரவிரிவை இலிங்கபுராணமுதலியவற்றும் இத்தலபுராணத்தும் காண்க.

கூவலாதிநின்ற இடம் திருப்புறம்பயம். இச்சரித்திரவிரிவை இதன் முற்படலத்தும் இத்தலபுராணத்தும் காண்க. இதில் சுவாமி திருநாமம்-சாட்சிவரதநாதர்; தேவிதிருநாமம்-கரும்படுசொல்லம்மை.

சாமகண்டத்தன்றன்னைத்தானருச்சித்ததென்னர்
கோமகன்பிரமசாயைகுறைத்ததிப்பதியாம் கங்கை
மாமகந்தோறும்வந்துவந்துதற்படிந்தோர்விட்டுப்
போமகம்போகமூழ்கும்புனிதநீர்ப்பதியைக்காண்மின். (௨௫)

அகத்திய முனிவரருளியவாறு காசிபர் முதலிய முனிவர்கள் சரஸ்வதியைக் குறித்துத் தவமியற்றி வேதாகமங்களி னுண்மைப் பொருளையுணர்ந்து, இலக்குமியைக்குறித்துத் தவமியற்றிச் சிவாராதனைக்குவேண்டும் பாக்கியங்களையடைந்து, திருவருளாற் சிவபெருமானை யடையவேண்டுமாகலின் தாம் வகுத்த சண்பகச் சோலையில் வதிந்து, உமாதேவியாரைக் குறித்துத் தவமியற்றியவழி, அத்தேவியார் அவர்க்குக் காட்சிதந்து, அவர்பிரார்த்தனைக்கிரங்கி, இதயகமலத்தில் இறைவரைத் தியானிக்க; அப்பெருமான் சோதிமயமகாலிங்கமூர்த்தியாய்த் தோன்றி, பிறைமுடிமுதலிய திருவுருப்பொலிவோடு ஏகநாயகராய்விளங்கி, யாவரும் வழிபட்டுய்யுமாறு அச்சோதிமயமகாலிங்கத்தை அத்திருவிடைமருதூரில் அநாதியாகவுள்ள இலிங்கத்திற் கலப்பித்து, தம்மைப் பூசிக்கு முறைமையை அம்முனிவருணர அவ்விலிங்கத்தைத் தாமேபூசித்தாராகலின், "சாமகண்டத்தன்றன்னைத் தானருச்சித்தவிப்பதி" எனவும், இது வரகுணபாண்டியர்க்குநேர்ந்த பிரமகத்தியை யொழித்ததாகலின், "தென்னர்கோமகன் பிரமசாயைகுறைத்ததாம்"எனவும் கூறினாரெனப் பிரித்துக்கூட்டுக. பரம்பரையாகப்பரனையர்ச்சித்த பாண்டியர்தலைவரது பிரமசாயைகுறைத்த

காண்டப்.

திப்பதி யெனவும் இதற்குப் பொருளுரைப்பர். இதில் சுவாமி திருநாமம்-மருதீசர்; தேவி திருநாமம்-பெருமுலைநாயகியம்மை.

கங்கை யமுனை நருமதை சரஸ்வதி கோதாவரி காவிரி பயோட்டிணி சரயு கன்னியாகுமரியென்னும் நவநதிகளும் தம்மிடத்துவந்து மூழ்குவோர் பாவமனைத்தும் தம்பாலடைதலின் அவற்றைச்சுமக்கலாற்றாது ஒருங்குகூடி ஆலோசித்து, பெண்ணுருக்கொண்டு திருக்கைலையிற்சென்று, வணங்கிமுறையிட்டவழி, பெருமான் "நீவிர்வருந்துதலொழிக; கும்பகோணத்திலே அக்கினிதிக்கில் ஒருதீர்த்தமுண்டு; அதில் வியாழன் சிங்கராசியில்வரும்போதுவரும் மகநக்ஷத்திரத்தில் நீராடுவீராகில் நீங்கள் சுமந்தபாவம் விடுபடும்; அந்நக்ஷத்திரமும் பன்னிரண்டுவருடத்திற்கொருதரம்உத்தமமாகும்; அதுவுஞ் சமீபித்தது செல்லுக." என்றுபணிக்க; அங்ஙனமே பன்னிருவருடத்திற்கொருமுறைவந்து அந்நவநதிகளும் மூழ்கி, பாவங்களைப்போக்கிக்கொள்கின்றனவாகவும், "கங்கைமாமகந்தோறும் வந்துவந்துதற்படிந்தோர்விட்டுப்-போமகம் போகமூழ்கும்" எனக் கங்கை ஒன்றன்மேல் வைத்துக் கூறியதென்னையெனின், அது ஏனைநதிகளிற் சிறத்தல் பற்றி யென்க, இதில் சுவாமி திருநாமம்-கும்பேச்சுரர்; தேவி திருநாமம்-மங்களநாயகியம்மை. இச்சரித்திர விரிவுகளைத் தலபுராணங்களுட் காண்க.

குருமொழிதந்தைக்கீந்தெங்குருவுறைமலையீது எங்கோன்
கருமுகில்வண்ணத்தண்ணல்கண்ணிடந்தடியிற்சாத்தப்
பொருவிறலாழியீந்தபுரமிது நந்தியெந்தை
திருவுருவடையநோற்றதலமிது தெரிந்துகாண்மின். (உகூ)

முன்னொருகாலத்திலே, பிருகுமுனிவர் மூதுதவம்புரியத்தொடங்குங்கால், "இத்தவத்திற்கு எவரேனும் இடையூறுபுரிவரேல் அவர் தமதுநிலைமையுணராராய், ஐந்தெழுத்தையுமறந்து அவற்றின்பொருளும்விளங்காது, கற்றறிமூடராகுக." எனக்கடுஞ்சாபமிட்டு, தவநிலையையுடையராக; அவர் தவாக்கினி உலகமுற்றும்வெதுப்பலால் உயிர்கள் பதைத்துவீழ்தல்கண்டு, சிவபெருமானெழுந்தருளி, அவர்முடிமீதில் திருக்கரஞ்சேர்த்தினர். உடனே அக்கனல்தணிய அம்முனிவர்விழித்தெழுந்து, அஞ்சிப்பணிந்து, "எமதிறைவரே! எளியேன் தவம்தொடங்குங்கால் எண்ணாது அறியாமையாலிசைத்த சாபத்தீங்கைப் பொறுத்தருளல் வேண்டுமென்று தாழ்ந்துபிரார்த்தித்தலும், நம்பெருமான் நமதுசாபம்வழுவினும் நமதன்பர்சாபம்வழுவாது; ஆக

லின், யாமே அதை ஏற்றுக்கொள்கின்றோம்" என்றருள; அம்முனிவர் பயந்துபணிந்து, "அன்பர்க்குமகிமைவிளங்க இதையும் அங்கீகரிப்பது திருவுளப்பாங்காயின், முருகக்கடவுளுக்கும் தேவரீர்க்கும் அபேதநிலைமையுண்டாகலின் அவர்பாற்கேட்டுத்தெளிதல்வேண்டும்" என வேண்டினர். பெருமான் அம்முனிவர்வாய்மையை நிறுவுதற்பொருட்டு இத்தலத்தையடைந்து, கயிலையின் ஓர்சிகரத்தைச் சாமிமலையெனப்பெயர்வழங்கநிறுவுவித்து, ஆலயம்வகுத்து அதில் முருகக்கடவுளைவழிபட; அக்கடவுள் அப்பிரானுக்குப்பஞ்சாக்கரநிலைமையையும் அவற்றின் உண்மைப்பொருளையும் விளக்கியதுமன்றி, அகத்தியமுனிவர்க்கும் ஞானோபதேசமும் தமிழாசிரியத்தலைமையும்பாலித்து, சாமிநாதரெனவிளங்கலின், "குருமொழிதந்தைக்கீந்தெங்குருவுறைமலையீது" என்றாரென்க. அன்றிப் பிரமதேவர்செருக்கையுணர்ந்து, பிரணவப் பொருள்வினவி, விளங்காமைகண்டு, இதுதெரியாதநீயோ சிருட்டி செய்தற்குரியனெனத் தலையிற்குட்டிச் சிறைசெய்தவழி, பெருமானெழுந்தருளிவிடுவித்து, அப்பொருள்நினக்குப்போதுமோவென வினவ; முறைப்படி உணர்த்தினமையைக் குருமொழிதந்தைக்கீந்தமையாகக் கோடலுமொன்று.

திருமால் ஆதியிலே சக்கரம்பெறவிரும்பி, திருவீழிமிழலையென்னும் இத்தலத்தே ஆயிரந்தாமரைமலர்களைக்கொண்டு, ஆயிரநாமங்களால் அருச்சித்துவழிபடுங்கால், சிவபெருமான் அவரன்பைச்சோதித்தற்கு ஒருதினம் ஒருமலரை மறைத்தருளலும், அத்திருமால் தமது நியமந்தவறாதபடி அத்தாமரைமலர்போலும் கண்களிலொன்றை இடந்துசாத்த; அப்பெருமான் திருவுளமகிழ்ந்து வெளிப்பட்டு, அவர் வேண்டிய சக்கராயுதத்தை அளித்தாராகலின் "எங்கோன், கருமுகில் வண்ணத்தண்ணல் கண்ணிடந்தடியிற்சாத்தப்-பொருவிறலாழியீந்தபுரமிது" என்றாரென்க. இதில் சுவாமிதிருநாமம்-வீழியழகர்; தேவிதிருநாமம்-சுந்தரகுசாம்பிகையம்மை. இச்சரித்திரவிரிவுகளைத் தலபுராணங்களுட்காண்க.

* சிலாதமுனிவர் சிவானுக்கிரகத்தால் மகாப்பிரளயகாலத்தும் அழிவில்லாத நித்தியத்துவம்பெற்று வசிக்குநாளில் ஒருநாள், இயமலோகஞ்சென்று, அங்கே புத்திரப்பேறில்லாதாரடையும் புத் என்னும் நரகத்தில் வருந்துவோர் நிலைமையைக்கண்டுபயந்து, அயோனி

* இவர் பூர்வம் ஒரு தவசியின் பலிப்பாத்திரத்திலே கல்லையிட்ட பாவத்தால் அதனைப் பொடி செய்து நுகர நேர்ந்தமையின் இப்பெயர் பெற்றாரென்க. சிலாதர் - கல்லைநுகர்ந்தவர். அத - உண்ணுதல்.

**காண்டம்.**

சனுய்ச் சிவாம்சம்பெற்றுச் சகலகலைகளினும்வல்ல ஒருபுத்திரனை அடையும் பொருட்டுச் சிவபெருமானைக்குறித்துத் தவமியற்றி, அத்தலைவரருளியவாறே புத்திரகாமேட்டி யியற்றுதற்குத் தலசுத்தி செய்ய உழுதகொழுமுனையில், நவரத்தினமிழைத்த பொற்பெட்டியொன்றகப்பட்டது. அதைத்திறந்து அதில் சோதிமயமாகிய திருமேனியும் திருநேத்திரமும் சதுர்ப்புயமும் சந்திரசடாமுடியும்வாய்ந்த சிவசொருபத்தைக்கண்டு வணங்கி, பின் அசரீரியுணர்த்திய படியே அப்பெட்டியை மூடித்திறக்குங்கால், சோதிமயமாகிய ஓராண்குழந்தைதோன்றலும், அதைச் சாருலக்ஷணையென்னும் மனைவியார் அருமைபாராட்டிவளர்க்க; முனிவர் சைலாதியெனத் திருநாமந்தரித்து வேதாதிகலைகளைக் கற்பிக்குநாளில், முன் பெருமானருளிய எட்டுவயதில் ஏழுசென்றமையின் இன்னும் ஒருவருடத்தில் உயிரகலுமேயென ஏக்கமுற்றனர். அதனைச் சைலாதியறிந்து, அவரைத்தேற்றி, திருவையாறென்னும் இத்தலத்திலே சூரியபுஷ்கரணியில் கழுத்தளவுதீர்த்தத்திலிருந்து, உருத்திரமந்திரத்தை எண்ணில்லாத உருச்செபிக்க; பெருமான்பிரசன்னராகி,இயமவாதையைக்கடப்பித்து, அஸ்தமத்தகசையோகதீக்ஷையால் சிவசாரூபமளித்து, நந்திகேச்சுரரெனத் தீக்ஷாநாமந்தரித்து, சிவகணத்தலைவராக அபிஷேகித்து, தமக்கும் அவர்க்கும் வேறுபாடுதோன்ற அவர்விரும்பிய படி வானரமுகமளித்து, மருத்துவின்புதல்வியாகிய சுயசையை மணம்புரிவித்தாராகலின் "நந்தியெந்தை திருவுருவடையநோற்ற தலமிது" என்றாரென்க. இதில் சுவாமிதிருநாமம்-செம்பொற்சோதீசர்; தேவி திருநாமம்-அறம்வளர்த்தநாயகியம்மை. இச்சரித்திர விரிவை இலிங்கபுராணமுதலியவற்றும் தலபுராணத்தும்காண்க. இவர்க்கு முன்னர்பெருமானருளிய ஆயுள் பதினாறென்பது இத்தல புராணம்.

முடங்குகாற்சிலந்தியானைமலைமகண்முளரிநாட்டத்
தடங்கடல்வண்ணனேற்றதவநகரிது முச்சென்னி
மடங்கலேறனையானுமவரையிது குடைந்தோர்பாவ
மடங்கலும்பருகும்பொன்னியாறிது காண்மின்காண்மின். (உஎ)

திருக்கைலையில்வதியும் கணத்தலைவருள்ளேமாலியவான்புட்பதந்தனென்னும் இருவரும் இறைவர்திருத்தொண்டில் ஒருவரினொருவர் சிறத்தலாற் பொறாமையுற்றுப்பகைகொண்டு, ஓரிடத்திற்சந்தித்துச் சினக்குங்கால், மாலியவான் புட்பதந்தனை யானையாகெனச்சபிக்க; அவன் மாலியவானைச் சிலந்தியாகெனச்சபித்தனன். இருவரும்

இறைவரையடைந்து, முறையிட்டு, அக்கடவுளருளியவாறு ஞான கேத்திரமென்னும் இத்தலத்தின்பால் சிலந்தியும் யானையுமாக உதித்த வழி, யானை வெண்ணாவலடியில் அமர்ந்தருளும்விமலரைப் பூர்வசன் மவுணர்ச்சியால் அன்புமேலிட்டு, விதிப்படி அருச்சித்தொழுக; சிலந் தியும் ஒருதினமணுகி, வாய்நூலால் ஆலயமுதலியவகுத்து, வழிபட் டது. மறுதினம் யானைவந்து அதனை அநுசிதமென்றொழித்து, வழக் கம்போலப் பூசித்தகன்றபின், சிலம்பியணுகி, அந்தோ! சருகுமுதலிய விழாதபடி யானியற்றிய ஆலயத்தையழித்து இலைமுதலிய குப்பை யைத் திருமேனியிலிட்டவரை இனிக் கொல்வதேமுறையெனக்கு றித்து,முன்போல ஆலயமமைத்துவழிபட்டு,அன்றிரவினும் நித்திரை யின்றி அருகிலொளித்து நோக்கியிருந்தது. காலையில் யானையணுகிக் கோயிலையழித்துப்பூசிக்கக் கண்டுவெகுண்டு, துளைக்கையிற்புக்குக்க றித்தலும்,யானை வேதனைபொறாது அக்கையைவாயிற்கவ்விக்கொண் டுவீழ்ந்துமடிய; சிலந்தியும்,வெளிப்படுதற்கு வாயில்கிடையாமையின் மடிந்தது. இறைவர்காட்சிதந்து, மாலியவானுக்கு, கோச்செங்கட் சோழராயுதித்துவழிபட்டுக்கதியடையக்கற்பித்து,புட்பதந்தனுக்குச் சிவபதவியளிக்க; இருவரும் அங்ஙனமே பேறுபெற்றாராகலானும்,

ஆன்மாக்கள் போகநுகர்தற்பொருட்டு அம்பிகையோடுகூடிப் போகியாயிருந்தஇறைவர், அவை அருங்கதியடைதற்பொருட்டு அள வில்காலம் யோகத்திருந்தவழி, அதுகண்டதேவியார் எவரும்நோக்க இகழ்ச்சிநகைபுரிதலும், இறைவர் "இக்குற்றந்தீரத் திருவானைக்கா வென்னுந்தலத்திலே தவநெறியைஇனிதுவாய்ந்து எம்மைப்பூசிக்கக் கடவாய்" என்றுபணிக்க; அம்பிகையார் அங்ஙனமே நியமமேற் கொண்டு, அப்புவைச்சிவலிங்கமாகத்திட்டி நெடுநாளருச்சித்து, ஒரு நாள், பிரிவாற்றாமையால் வருந்தி, பின் பெருமான்பிரசன்னராகப் பேணியவரங்களைப் பெற்றாராகலானும்,

விபீஷணன் இராமமூர்த்தியோடு அயோத்தியையடைந்து, அவ ரளித்த திருமாலுருவமும் தேவவிமானமுங்கொண்டு, விடைபெற்று மீளும்பொழுது,காவிரிநதியில்நீராடி, அத்திருமாலை ஆராதித்து அவ் விமானத்திலமர்வித்து, ஒருமணன்மேட்டிலிருத்திவிட்டு, அமுது கொண்டபின், அவ்விமானத்தையெடுக்க; அது பெயராதுவேரூன்றி னமைகண்டு,மிகுகவலையுற்றனன். அவ்வமையத்தே அத்திருமால்கன விற்றோன்றி, "நீவருந்தற்க; இது ஞானகேத்திரமென்னும் திருப்ப தியாகும்; இங்கே திருமகளுந் தவமியற்றுகின்றனள்; யாமும் வசிப் போம்; இனித் திருமகள் நடனஞ்செய்யும்படி யாம்செய்விப்பதால்

காண்டம்.
இத்தானத்திற்குச்சீரங்கமெனவும் எமக்குச் சீரங்கநாதரெனவும் பெயர்வழங்கும்; நீ ஆண்டுக்கொருதரம் ஈண்டடைந்து எம்மையும் வெண்ணாவலின்கீழமரும் இறைவரையும்இறைஞ்சி, இச்சித்தவரம்பெறுவாயாக.' என்றுபணித்து மறைந்து, இறைவரைப்பூசித்து, அவர்சந்நிதிமுன் இலக்குமியைப் பாவைநடனமியற்றுவித்து, அவ்விறைவர் வெளிப்பட்டருள வேண்டியவரங்களைப் பெற்றாராகலானும்,"முடங்குகாற்சிலந்தியானை மலைமகண் முளரிநாட்டத்-தடங்கடல் வண்ணனேற்றதவநகரிது" என்றாரென்க. இதில்சுவாமிதிருநாமம் - அமுதலிங்கேசர்; தேவி திருநாமம்-அகிலாண்டநாயகியம்மை.

இச்சோணாட்டெல்லையில்இராவணனுக்குக்காவலாகஇருந்ததிரிசிரா கரன் தூடணனென்னும் மூவருள் பிந்திய இருவரும்; பகைவரைத்தொலைத்து, இலங்கையையடைந்தவழி, திரிசிரா அவ்விராவணனநுமதிபெற்று, தென்கயிலையெனப்படும் இத்தலத்தில் ஆலயம் மதில் கோபுரமுதலியவற்றைத் தெய்வத்தச்சனாற்சமைப்பித்து,சிவபெருமானையருச்சித்து பலதவமியற்றியும், காட்சிதந்தருளாமையாற் கவன்று, தன்றலைமூன்றனுள் இரண்டைத்தடிந்து, அக்கினியிலாகுதிசெய்து,மற்றதையும் அரியத்தொடங்குந்தருணத்தேபெருமான் பிரசன்னராகப் பணிந்துதுதித்து,தேவரீர்க்கும்இந்நகர்க்கும்என்பெயர் வழங்கல்வேண்டுமெனப்பிரார்த்தித்து, அவ்வரம்பெற்றானாகலின், "முச்சென்னி - மடங்கலேறனையானுமவரையிது" என்றாரென்க. இதில் சுவாமி திருநாமம்-தாயுமானவீசர்; தேவி திருநாமம்-மட்டுவார்குழலியம்மை.

இந்நதிவெண்முத்தாரமெனக்கிடந்திலங்குஞ்சென்னி
மன்னவனுடைதென்ப தமிழறிவைகைப்பேர்யா
றந்நதி துறக்கமண்மேல்வழுக்கிவீழ்ந்தாங்குத்தோற்றித்
தென்னவனுடுசேய்த்தாத்தெரிவதேகாண்மினென்றான். (௨அ)

பொங்கர்மென்புதல்களென்னப்பொருநதிசிறுகாலென்னக்
கொங்கலர்தடஞ்சிற்றூறற்குழியெனப்பழனஞ்சில்லி
தங்குமென்பாத்தியென்னத்தாழைதாழ்சிறுபுல்லென்னப்
பைங்குலைக்கதலிமஞ்சட்பாத்திபோற்றோற்றக்கண்டார். (௨௯)

பன்னிறமாடமாலையுபரிகைப்பந்திசெய்குன்
றன்னம்வெண்குருகுசெம்போத்தளகுபைங்கிள்ளைமஞ்ஞை

(௨அ) தோற்றிச் சேய்த்தாத் தெரிவதே தென்னவனுடு எனஇயையும்.
(௨௯) சில்லி - சிறுகீரை. தாழை-தெங்கு.

யின்னபுள்வேறுவேறுயொழுங்குபட்டிருப்பதொப்ப
மின்னுபூங்கொடியப்புட்கள்சிறகெனவிதிர்ப்பக்கண்டார். (கூ0)

மேற்படிவேறு.

கண்டுநாட்டுநகர்வளங்கணடந்துநடந்துகண்கள்விருந்
துண்டுமீளவகல்விசும்பாறெழுகியவலமாவருமுனிவர்
விண்டுழாவுங்கொடுங்குன்றும் தளிப்புத்தூரும் விரிபொழில்வாய்
வண்டொடன்மயிலாடல்பயிலாடானைவளநகரும். (கூக)

கொடுங்குன்றத்தில் சுவாமிதிருநாமம்-கொடுங்குன்றீசர்; தேவி திருநாமம்-குயிலமுதநாயகியம்மை. தளி - ஆலயம். திருப்புத்தூரில் சுவாமிதிருநாமம்-திருப்புத்தூரீசர்; தேவிதிருநாமம் - சிவகாமித்தாயம்மை. திருவாடானையில் சுவாமிதிருநாமம்-ஆதிரத்தினேசர்; தேவி திருநாமம்-அம்பாயிரவல்லியம்மை.

சரதவேதம்பரவுபுனவாயினகரும் தவசித்த
ரிரதவாதஞ்செய்துசிவனுருவங்கண்டவெழினகரும்
வரதனுகியரனுறையுங்கானப்பேரும் மலைமகளை
விரதயோகநெறிநின்றுமணந்தார்சுழியல்வியனகரும். (கூஉ)

திருப்புனவாயிலில் சுவாமிதிருநாமம்-பழம்பதிநாயகர்; தேவிதிருநாமம்-பரங்கருணையம்மை. தவசித்தர் இரதவாதஞ்செய்து சிவனுருவங்கண்டவெழினகர் - திருப்பூவணம். இதில் சுவாமிதிருநாமம் - பூவணநாதர்; தேவிதிருநாமம்-மின்னும்பிகையம்மை. கானப்பேர் - காளையார்கோயில். இதில் சுவாமிதிருநாமம்-காளையீசர்; தேவிதிருநாமம்-மகமாயியம்மை. திருச்சுழியலில் சுவாமிதிநாமம்-திருமேனியீசர்; தேவிதிருநாமம் - துணைமாலையம்மை.

மறவாளிலங்கையிறைமகனைவதைத்தபழியான்மருண்டரியன்
றறவாணேமியளித்தவனையர்ச்சித்தகன்றவணிநகரும்
நிறவாண்முத்தும்வயிடுயேநிரையும்பொன்னும்விளைபொருனைத்
துறைவாய்ப்பிறவாக்கடவுள்வேய்வயிற்றிற்பிறந்ததொன்னகரும். ()

இராமமூர்த்தி இராவணன்முதலியோரைக்கொன்று,விபீடணனுக்கு அரசுரிமைபாலித்து, கந்தமாதனத்தையடைந்தவழி, அவ்விராவணன் விச்சிரவாவென்னும் முனிவர்க்குப்பிறந்தோனாகலின், பிரமகத்தி தம்மை உடன்றொடரக்கண்டுமருண்டு, அங்கே தம்மைக் காணவந்து புகழ்ந்துள்ள முனிவரைவினவி, அவரால் அத்தலத்தின் மகிமையுணர்ந்து, அவரருளியவாறே அச்சேதுவில் சீதையாற்குவி

**காண்டம்.**

த்த மணற்குவியலைச் சிவலிங்கமாகத்தாபித்து, தனுக்கோடியால் ஒருதீர்த்தமுண்டாக்கி, அபிஷேகித்து அருச்சித்து, நந்திதேவரையும் பிரதிஷ்டைசெய்து, பிரமகத்தியகன்று, வேண்டியவரம்பெற்று அயோத்தியையடைந்தாராகலின், "மறவாளிலங்கையிறைமகனை வதைத்தபழியான் மருண்டரியன் றறவாணேமியளித்தவனையர்ச் சித்தகன்றவணிநகர்" என்றுரெனக. இவ்விராமேச்சரத்தில் சுவாமி திருநாமம் - இராமநாதேச்சுரர்; தேவி திருநாமம் - பர்வதவர்த்தனியம்மை.

யாவும் அழியும் மாகாப்பிரளயத்தில் எமக்கும் அழிவுவருமோ வென்று வேதங்கள்கலங்கி, அழியாநிலைமையைப்பெற வடகயிலையின் ஓர்பால்டைந்து, தவநெறியைமேற்கொண்டு, சிவபெருமானைத் தாபித்துப்பூசித்து, வழிபடுங்கால், அப்பெருமான்பிரசன்னராதலும் அவைகளிறைஞ்சி, "எந்தையே ! தோன்றுநிலைமையையுடையதேவரீர் எங்கள்பால் முத்தெனத்தோன்ற யாங்கள் மூங்கில்வனமாகி நீழல்செய்து என்றும் அழியாதிருக்குமாறு திருவருள்பாலிக்கவேண்டும்" எனப் பிரார்த்தித்து, அக்கடவுள்கட்டளைப்படியே திருநெல்வேலியென்னும் இத்தலத்தையடைந்து, திருமூலத்தானப்பெருமானைத் தரிசித்து, அருச்சித்து வணங்கி, வேணுவனமாகி நீழல்செய்து கொண்டு, அருந்தவமியற்ற; அத்தலைவர் காட்சிதந்து, அவைவேண்டியவாறே அத்தலம் வேணுவனமெனவழங்க வரமளித்து, அவற்றிற்கு நடனதரிசனமும்பாலித்து, அங்கே சாநித்தியராகித் தங்கியருளினாராகலின், "பிறவாக்கடவுள்வேய்வயிற்றிற்பிறந்ததொன்னகர்" என்றுரெனக. இதில் சுவாமிதிருநாமம்-வேணுவனநாதர்; தேவி திருநாமம்-காந்திமதியம்மை. இச்சரித்திரவிரிவுகளைத் தலபுராணங்களுட்காண்க.

துளபக்குன்றைக்கொன்றைமுடிக்குன்றமாக்குந்தொன்னகரும்
அளகைப்பொறித்தகொடியிளையோன்மானேர்நோக்கினைமகள்
புளகக்குன்றைமணந்துமுதலிருந்தபொருப்பும் போர்விசயன்
வளைவிற்றுக்கவடுக்கிடந்தமுடியோன்மேயவளநகரும். (நுச)

அகத்தியமுனிவர் பொதியமலையைநோக்கிச் செல்லுங்கால், திருக்குற்றாலமென்னும் இத்தலத்தைச்சேரலும், அங்குள்ளவைணவர் அம்முனிவரின் சிவவேடப்பொலிவைக்காணுதற்குக் கண்கள் கூசி,ஈண்டணுகற்கவெனப்பெரிதும் இகழ்ந்துரையாடாநிற்க; முனிவர் 'ஈங்கு நீவிர் இருப்பதுணரேன்; உணர்வனேல் அணுகேன்; முனியற்க; இதோசெல்கின்றேன்" என்றுரைத்தகன்று, அவர்செருக்கை

யடக்கச்சிந்தித்து, ஒருபாகவதருருக்கொண்டணுகினார். அவ்வைண வரெதிர்கொண்டு, வணங்கியுபசரித்தலும், "யாம் அழகர்திருமலை யில் வசித்துள்ளோம்; இப்பொழுது அத்திகிரிக்குச்செல்கின்றோம்; இங்ஙனம் ஒரு திவ்வியதிருப்பதியுளதெனக்கேட்டு வணங்கவந்த னம்" என்றுகூறி, அவருடன்சென்றுபணிந்து, இங்கே திருமஞ்சனஞ் செய்ய விரும்பினோமாகலின் அதற்குரிய உபகரணங்கள்வேண்டு மென்றுரைத்து, அவர்கொணர்ந்தவற்றை விதிப்படிசுத்திசெய்து கொண்டு; அத்திருமாலின் திருமுடிமேற் செங்கையோச்சிக் குறுகுகு றுகென இருத்தி, அரக்கிற்புனைந்தபாவைமீது அழலுற்றெனக் குழை வித்துச் சிவலிங்கமாக்கி, பூசித்தாராகலின், "துளபக் குன்றைக் கொன்றைமுடிக் குன்றமாக்குந்தொன்னகர்" என்றாரென்க. இதில் சுவாமி திருநாமம் - குறும்பலாவீசர்; தேவி திருநாமம் - குழல்வாய் மொழியம்மை.

முருகக்கடவுள் சூரபத்மன்முதலிய அசுரரையழித்து, திருப்ப ரங்குன்றத்திற்கெழுந்தருளி, அங்கே பராசர முனிவர் புத்திரர்க ளாகிய தத்தன் அனந்தன் நந்தி சதுர்முகன் பரிதிப்பாணி தவமாலி என்னும் அறுவர்க்கும் ஞானோபதேசம்பாலித்து வீற்றிருக்குங்காலை யில், இந்திரன் தனதுஅருமைப்புத்திரியாராகியதெய்வயானையம்மை யைத் திருமணமுடிக்கத் திருமாலாதியருடன் ஆய்ந்து, அக்கடவுளை வணங்கி, "தேவரீர் எங்கள்சிறையைத்தவிர்த்து எமதரசியலையளித் தீர்; அதற்குக் கைம்மாறுபிறிதின்று; யாங்களுய்யுமாறு என்புதல்வி யைத் திருமணமுடித்தல் வேண்டும்" என்றிரப்ப; அவ்வண்ணலார் "அந்நங்கை நம்மை மணம்புரிதற்குநெடுங்காலம் தவஞ்செய்திருத்த லால் அங்ஙனமேயாக" எனத்திருமணமுடித்து, அப்பரங்குன்றத்தை முதற்படைவீடாகக்கொண்டு, வீற்றிருந்தாராகலின், "அளகைப் பொறித்தகொடியிளையோன்மானேர்நோக்கினானமகள், புளகக்குன் றைமணந்துமுதலிருந்தபொருப்பு" என்றாரென்க. அளகு-கோழி. இச்சரித்திர விரிவுகளைக் கந்தபுராணத்தும் தலபுராணங்களுள்ளும் காண்க.

போர் விசயன் வளைவிற்றுக்க வடுக்கிடந்த முடியோன் மேய வளநகர் - திருவேடகம். இதில் சுவாமி திருநாமம்-ஏடகநாதேச்சு ரர், தேவி திருநாமம்-உமாதேவியம்மை. விசயன் வழிபட்டுப் பாசு பதாஸ்திரம் பெற்ற சரித்திரம்எவரும் அறிந்ததாகலின் விரித்திலம்.

கொண்டல்படியுந்திருவாப்பனூருந்தொழுதுகுளிர்திரைக்கை
வண்டுபடியுங்கமலமுகைவைகைப்பிராட்டியெதிர்வணங்கிக்

காண்டம்.

கண்டுபணிந்துதிசையெட்டும்விழுங்கியண்டங்கடந்துலக
முண்டநெடியோனெனவுயர்கோபுரமுன்னிறைஞ்சியுள்புகுதா. ()

சோழாந்தகனென்னும் பாண்டியர் ஒருதினம் வேட்டமாடுங்கால்,எதிர்ப்பட்டமானைத்துரத்திக்கொண்டு தனிச்சென்று, அதனை வீழ்த்தி, நடந்த இளைப்பால் ஓர் மரத்தடியில் அவசமுற்றுக்கிடத்தலும், தேடிவந்த அமைச்சர்கள்கண்டு, சீதளோபசாரத்தால் உயிர்ப்பியங்கச்செய்து, விழித்தபின், சிறிது ஆகாரங்கொண்டு இளைப்பாறுகவென்று விண்ணப்பிக்க; அவர் "நீவிரளிப்பது தேவருணவேயாயினும் சுயம்புலிங்கதரிசனமின்றிப் புசியேன்" என மறுத்தனர். அவ்வமைச்சர் அருகே யாண்டுந் தேடியும் சுயம்புலிங்கம் காணாமையால் வருந்தி, அரசரைப் பாதுகாத்தலையேவிரும்பி, ஒரு கொன்றை மரத்தடியிலே, ஆப்பினை நிறுவி, மலர்முதலியவற்றால் சிவலிங்கம் போல அலங்கரித்து, அறிவிக்க; அரசர்குரிசில் உள்ளபடியே சுயம்புலிங்கமெனச்சிந்தித்து, கண்ணீர்பெருகக் கரங்களைகூப்பி, வணங்கித் துதித்து, நியமமுற்றி, இனிய வுணவுண்டு, இளைப்பாறியபின், அவ்வண்ணலுக்கு ஆலயம் அமைக்கவேண்டுமென அணுகிப் பார்க்குங்கால், ஆப்பு வடிவாயிருக்கக்கண்டு, சிவவிரதபங்கம் நேர்ந்ததேயெனத்தியங்கி, "யான் இதுகாறும் விரதமேற்கொண்டு சுயம்புலிங்கதரிசனஞ்செய்தது உண்மையேல், இவ்வாப்பு சிவலிங்கமாகுக; அன்றேல், கைவாள்கொண்டு கழுத்தையரியக்கடவேன்" என்று கூறித் துணிந்தனர். பெருமான் திருவருள்சுரந்து, "யாம் நிலங்கீழுருவிநிலைபெற்று ஆப்புடையநாயகரென விளங்கினோம்; நம்பக்கலில் குரவங்கமழ் குழலாளெனத் தேவியைத்தாபித்துப் பூசிப்பாயாக" என்று அசரீரியால் கட்டளையிட; அங்ஙனமே செய்து முடித்தாராகலின், அது திருவாப்பனூரென்றாயிற்றென்பது அத்தலமான்மியம்.

நெடியோனென்றது,மாவலிபால்சிற்றுருவாய்ச்சென்று மூவடிமண்கேட்டு அதுபெற்றபின்கொண்ட திருவிக்கிரமாவதாரத்தை.

மறுகுதோறும்பணிந்தெழுந்துவளைந்துவளைந்துபொற்கோயில்
குறுகிவிதியாற்பொற்கமலங்குடைந்துசெய்யுங்குறைநிறுவி
யுறுதிபெறவைந்தெழுத்தெண்ணியுற்றுமதத்துநாற்றடந்தோட்
சிறுகுகண்ணவைங்கரத்துச்சிந்தியானையடிவணங்கா. (௩௬)

மும்மையுலகுநான்மறையுமுறையாலீன்றவங்கயற்க
ணம்மையடிகண்முடியுறத்தாழ்ந்தன்புகொடுத்தின்னருள்வாங்கி

(௩௬) குறை-இன்றியமையாக்கருமங்கள்.

திருவாலவாய்க்

வெம்மையொளிகான்மணிக்கனகவிமானத்தமர்ந்ததனிச்சுடரின்
செம்மையடித்தாமரைவேணிச்சிரமேன்மலரப்பணிந்தேத்தா. (௩எ)

மேற்படிவேறு.

அன்றிருபோதுமுண்டிதுறந்திராவறுக்குந்தீவா
ளென்றெழுமுன்னீராடிநியதிகளியற்றியைந்தும்
வென்றுளத்தன்புபாயவிளைமுழுமுதலைப்பார்மேன்
மின்றிரண்டென்னநின்றவிமானமீதிருப்பக்கண்டார். (௩அ)

வாசமஞ்சனந்தேன்கன்னல்பைங்கனிமறுவிலானைந்
தாசறுமமுதமைந்துதென்மலையாரம்வாசம்
வீசுதண்பனிநீர்வெள்ளமான்மதம்விரைமென்போது
தூசணிமணிப்பூணல்லசுவையமுதின்னதாங்கா. (௩௯)

சதவுருத்திரத்தாலாட்டிமட்டித்துச்சாத்திப்பூட்டிப்
பதமுறமனுவாலட்டபாலமுதருத்திப்பஞ்ச
விதமுறுவாசம்பாகுவெள்ளிலையளித்துப்போக
முதவுறுதூபதீபாதிகள்பலவுவப்பநல்கா. (ச0)

ஐம்முகச்சைவச்செந்தீயகத்தினுந்துவையார
நெய்ம்முகந்தருத்திப்பூசைநிரப்பிநால்வேதஞ்சொன்ன
மெய்ம்மனுநூற்றுப்பத்தான்மூவிலைவில்லநீலங்
கைம்மலரேந்திச்சாத்திக்கடவுளையுவப்பச்செய்து. (சக)

வாசமஞ்சனநீரோடுமந்திரமலர்கைக்கொண்டு
பூசையின்பயனைமுக்கட்புண்ணியன்கையினல்கி
நேசநெஞ்சூறக்கண்கணிறையநீரூறிச்சோர
வீசனையிறைஞ்சியாருமஞ்சலித்தேத்தல்செய்வார். (ச௨)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பழியொடுபாசடாறுகெடவாசவன் செய்பணிகொண்டவண்டசரணம், வழிபடுதொண்டர்கொண்டநிலைகண்டுவெள்ளிமணிமன்றுளாடிசரணஞ், செழியன்விளிந்திடாதபடிமாறியாடறெளிவித்தசோதிசரண, மெழுகடல்கூவிமாமியுடன்மாமனூடவிசைவித்தவாதிசரணம். (ச௩)

வெங்கரியாவிசோரநரசிங்கவாளிவிடுவேடரேறுசரணம்
புங்கவர்தேறவாதிமறையுட்கிடந்தபொருளோதுபோதசரணம்
வங்கமதேறிவேலைமகரம்பிடித்தவலையாண்மணாளசரணங்
கங்கணாகம்விசிநகரெல்லைகண்டகறைகொண்டகண்டசரணம். ()

**காண்டம்.**

மைந்தனிலாழிமேருமகவானகந்தைமடிவித்தநித்தசரணஞ்
சுந்தரநாமவாளிபணிகொண்டுகிள்ளிதொகைவென்றவீரசரணம்
வெந்திறன்மாறன்முன்கலுருவானைகன்னன்மிசைவித்தசித்தசரண
முந்தியகல்லின்மாதர்பெறவட்டசித்திமுயல்வித்தயோகிசரணம். ()

திருமணிமைந்தன்மைந்தன்முடிசூடவிற்றதிருமல்குசெல்வசரண
மருமகனென்றுமாமனுருவாய்வழக்குவலிபேசுமைந்தசரணங்
குருமொழிதந்துநாரைகுருவிக்குவீடுகுடிதந்தவெந்தைசரணம்
வருபழியஞ்சிவேடமகனுக்கிரங்குமதுராபுரேசசரணம். (சசு)

விருத்தகுமாரபாலவருண்மேனிகொண்டுவிளையாடுமண்ணல்சரணங்
குரத்தியைநச்சுபாவியுயிருண்டுசோரிகுடைவாகைவேலசரணங்
கருத்திசைபாணனுளினிசைபாடிமாறுகளைவேதகீதசரண
நரித்திரண்மாவைமீளநகரங்கலங்கநரிசெய்தநம்பசரணம். (சஎ)

முற்பகலாறிரண்டுசிறுபன்றியுண்ணமுலைதந்தவன்னைசரணம்
பொற்புறுமாயவாவையடலேறுகொண்டுபொருதட்டசிட்டசரணம்
பற்பலஞாலமெங்குமடையப்பிரம்புபடுமெட்டமூர்த்திசரணங்
கற்பினொருத்திமன்றலறிவிக்கமூன்றுகரிதந்தவள்ளல்சரணம். (சஅ)

அளவைகளாலும்வேதமுதனூல்களாலுமயன்மாயனாலுமளவாக், களவையுனக்குநாமகுணசின்னசாதிகதிசெய்தியில்லையவையு, முளவெனயாமறிந்து துதிசெய்யவேகொ லுலகஞ்செயன்பி னொவிதாய், விளையருண்மேனிகொண்டிவ்வறுபத்துநாலுவிளையாடல்செய்தபடியே. (சகூ)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எனத்துதித்தவசிட்டாதியிருடிகளைக்குறுமுனியையெறிதேனீப, வனத்துறையுஞ்சிவபெருமானிலிங்கத்தின்மூர்த்தியாய்வந்துநோக்கிச், சினத்தினைவென்றகந்தெளிந்தீர்நீர்செய்தபூசைதுதிதெய்வத்தான, மனைத்தினுக்குமனைத்துயிர்க்கு நிறைந்துநமக்கானந்தமாயிற்றென்னு. (ருo)

சிறந்தவருள்சுரந்துகுறுமுனியை வருகென்றுகரஞ்சிரமேல்வைத்துப், புறந்தடவியெமையொப்பாய்நீயேநின்கற்புடையபொலங்கொம்பன்னு, ளறந்தழையுமுமையொப்பாளாதலினுலுமையொப்பாரகிலத்தியாரே, நிறைந்ததவம்புரிந்தோனுந்தவத்துறுதிபெற்றோனுநீயேயன்றோ. (ருக)

(சசு) மைந்தன்-வீரபாண்டியன்.

உனக்கரிய வரமினியாந்தருவதெவனுனக்கரிதாவொன்றுங்காணே, மெனக்கருணைசெய்திலிங்கத்திடையிச்சைவடிவாய்ச்சென்றிருந்தானாக, தனக்கரியவரநல்குஞ் சிவலிங்கந் தன்பெயராற்றாபித்தான்றன், னினக்கருணைவசிட்டாதிமுனிவர்களுந்தம்பெயராலிலிங்கங்கண்டார். (ருஉ)

எத்தியருச்சனைசெய்துநினைவிலரிதாயன்பிலெளியவட்ட, மூர்த்தியை யங்கயற்கண்ணியன்பனைமுப்போதும்போய்முடிதாழ்ந்தின்பம், பூத்தமனத்தினராகிக்கருவித்தேன்பொதிந்தசிறுபுட்போலந்த, மாத்தலனில் வசிட்டாதி முனிவர்தபோ வனஞ்செய்து வதிந்தார் மன்னோ (ருந)

அருச்சனைப்படலம் முற்றிற்று.

திருவாலவாய்க்காண்டம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-நுநுகூரு.

---

# திருவிளையாடற்புராணம்

## முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

பரஞ்சோதிமுனிவர்திருவடிவாழ்க.



கடவுள் துணை.

# பிழையுந் திருத்தமும்.

☞ பிழைகளைத் திருத்திக்கொண்டே படித்தல் நலம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| அ | உ | ங | மாமதக் | மாகதக் |
| ,, | ங | உ | தொழுந்தக | தெழுந்தக |
| கூ | க0 | உ | தவப் | தவம் |
| கஎ | எ | க | வழிவிலா | வழுவிலா |
| கங | ஙஅ | ங | ருழவி | குழவி |
| ஙஉ | உ | க | நவணி | நவமணி |
| ,, | ,, | உ | காண்மண் | கான்மண் |
| ஙஎ | கக | உ | பத்திரிரை | பத்திரை |
| ஙஅ | உக | ச | பதித்தரு | பத்திதரு |
| சகூ | ஙசு | க | பாதள | பாதாள |
| ருரு | உஉ | ச | யோயினன். | போயினன். |
| சு0 | ருகூ | உ | மடிங்கும் | மடிக்கும் |
| சுஉ | எசு | க | எப்பவன | எப்புவன |
| சுஎ | கஉ | க | புள்ளிளய | புள்ளிய |
| ,, | கங | ச | மேவ்வைத் | மேல்வைத் |
| அ0 | உரு | ரு | றெழுந்தன்றே | றெழுந்ததன்றே. |
| கூஉ | உஎ | உ | றரிவிக் | றருவிக் |
| ,, | ஙச | உ | தருகுன்ற | தருகின்ற |
| கூஎ | எஉ | ங | பற்லவு | பற்பலவு |
| சுஅ | எரு | உ | கேசயர் | கேகயர் |
| கக0 | கஎ0 | ச | லடிபைப் | லடியைப் |
| ககஎ | உஎ | உ | ளினுவேறுகி | ளினும்வேறுகி |
| கஉரு | ரு | உ | யலயத் | மலயத் |
| கஙஎ | சச | ச | செல்லு | சொல்லு |
| கசக | ங0 | ங | நெறிந்து | நெறித்து |
| கஎஅ | சக | ச | சேவர் | சேர்வர் |
| உ0ங | கச | ங | வொற்றைக்சையு | வொற்றைக்கையு |
| உ0கூ | உ0 | க | நெஞ்சஞ் | நெஞ்சுஞ் |
| உஉக | ஙஅ | உ | விந்தமெழி | விந்தமொழி |
| உஉச | உக | ங | ரலைபப் | ரலைப்பப் |
| உஉசு | ஙசு | ச | டன்ன்றே | டன்றே |
| உஎங | கக | க | ஐயன் | ஐயன் |
| உஅகூ | ரு | க | விருதினு | விருதினு |
| உகூஅ | சுஎ | உ | ணகர்கவலஞ் | ணகர்வலஞ் |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௩௦௪ | ௩ | ௨ | கொழிந்த | கொழுந்த |
| ௩௨௯ | ௧௦ | ௧ | புனித்த | புனிதத் |
| ௩௩௬ | ௪ | ௩ | நாடாஅ | நடாஅ |
| ௩௩௯ | ௨௯ | ௪ | போரை | பேரை |
| ௩௪௩ | ௧௭ | ௩ | ரொன்றை | ரொற்றை |
| ௩௪௯ | ௨௨ | ௧ | னிழன்மணி | நிழன்மணி |
| ௩௫௧ | ௪௨ | ௨ | கிடைத்தநு | கிடைத்துநு |
| ௩௫௪ | ௬௪ | ௨ | சந்தமு | சாந்தமு |
| ,, | ௬௬ | ௪ | தொண்ட | தொண்டை |
| ௩௫௫ | ௭௦ | ௪ | யுடைத்து | புடைத்து |
| ௩௬௮ | ௨௯ | ௧ | மசவை | மகவை |
| ௩௭௩ | ௧௮ | ௩ | வகை | வைகை |
| ௩௭௮ | ௧௯ | ௪ | குமுமொய் | குமுதமுமொய் |
| ௩௮௩ | ௫௨ | ௪ | கேதைமாதை | கோதைமாதை |
| ௪௧௮ | ௪௧ | ௩ | பெருட்டி | பொருட்டி |
| ௪௨௧ | ௬௩ | ௧ | செங்கேல் | செங்கோல் |
| ௪௩௩ | ௮௪ | ௧ | யுணர்தவர் | யுணர்ந்தவர் |
| ௪௫௧ | ௩௪ | ௧ | பறம்பு | புறம்பு |
| ௪௫௪ | ௫௮ | ௨ | புறக் | புரக் |
| ௪௬௩ | ௪௫ | ௨ | யருனி | யருளி |
| ௪௬௪ | ௫௩ | ௪ | சொன்னவாரு | சொன்னவாறு |
| ௪௭௩ | ,, | ௭ | ஞானாந்த | ஞானாநந்த |
| ௪௮௩ | ௨௬ | ௧௨ | திரைவரே | திறைவரே |
| ௪௮௭ | ௨௯ | ௪ | னொற்ற | னோற்ற |

மைபதியாச் சில வெழுத்துக்கள் சிலபுத்தகங்களில் திருத்தமாகவு மிருக்குமாதலால் உய்த்துணர்ந்துகொள்க.

## அமைத்துக்கோள்வன.

மாணிக்கம்விற்றபடலம் ௪௩-வது பாட்டிலே, வடமொழிக் கிணங்க "ஒள்ளியநாமகளும்" என்றும், பன்றிக்குட்டிக்கு முலை கொடுத்தபடலம் ௨௫-வது பாட்டிலே, "பாவியோமேனாளிந்த" என்றும் பாடங்கொள்வதும், மாறியாடினபடலம் ௨௭-வது பாட்டிலே, தேவராவார்:—ஆதித்தர் பன்னிருவர் உருத்திரர் பதினொருவர் வசுக்க ளெண்மர் மருத்துவ ரிருவரென்னும் இவருள், ஒவ்வொருவர்கூற்றிற் கோடியராய், அவ்வத்தலைவராற் பேணப்பட்டு, முப்பத்துமுக்கோடி தேவரெனவிரிதலின், "நால்வயனத்த அவ்வானவர்" என்றுரெனப் பொருள்கொள்வதும் அமைத்துக்கொள்க. வயனம் - வயணம்; வகை.

## சிதம்பரம் ஈசானியமடம்

## ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளவர்கள் பார்வையிட்டவை.

| | | | |
|---|---|---|---|
| திருவிளையாடற்புராணம் முக்கிய குறிப்புடன் திக்கு... | 2 | 0 | 0 |
| ஷ டி தின் காகிதம் ... | 1 | 8 | 0 |
| சைவபுராணம், வாயுசங்கிதை சிலகுறிப்புடன் (சிறந்தநூல்) | 1 | 0 | 0 |
| சிவப்பிரகாசசுவாமிகள் தோத்திரப் பிரபந்தத்திரட்டு (குறிப்புரையுடன்) ... | 1 | 0 | 0 |
| குமரகுருபரசுவாமிகள் பிரபந்தத்திரட்டு குறிப்புரையுடன் | 1 | 0 | 0 |
| சிவபுராணாதி தோத்திரமஞ்சரி (சிறந்தநூல்) காலிகோ. | 0 | 14 | 0 |
| ஷ டி ஆப்பயிண்டு ... | 0 | 12 | 0 |
| சீகாளத்தி புராணம் செய்யுளும், வசனமும் ... | 0 | 12 | 0 |
| திருக்கூவப் புராணம் ... | 0 | 10 | 0 |
| நால்வர்நான்மணிமாலை விருத்தியுரை ... | 0 | 8 | 0 |
| ஷ டி ஆப்பையிண்டு ... | 0 | 6 | 0 |
| வைத்தீசுவரர் கோயிற்புராணம் ... | 0 | 6 | 0 |
| வீரசிங்காதன புராணம் (செய்யுளும் வசனமும்) ... | 0 | 6 | 0 |
| திருவெங்கைக்கோவை ... | 0 | 4 | 0 |
| சிவஞானபாலையதேசிகர் தாலாட்டு, நெஞ்சுவிடுதூது, திருப்பள்ளியெழுச்சி, பிள்ளைத்தமிழ், கலம்பகம் ... | 0 | 4 | 0 |
| முருகேசர் முதுநெறி வெண்பா. உரையுடன் (சோமேசர் முதுநெறி வெண்பாவைப் போன்றது) ... | 0 | 4 | 0 |
| சங்கரநாராயணர் கோயிற்புராணம் ... | 0 | 4 | 0 |
| மகாசிவராத்திரி கற்பம், மாதசிவராத்திரிகற்பம், சோமவாரசிவராத்திரி கற்பம், உருத்திராக்கவிசிட்டம், வருத்தமறவுய்யும்வழி, திருக்கோயிற்குற்றம், ஷ டி சூசனங்கள் ... | 0 | 4 | 0 |
| மதுரைக்கலம்பகம், மதுரை மீனாக்ஷியம்மை குறம், இரட்டைமணி மாலை, சிதம்பரம் சிவகாமியம்மையார் இரட்டைமணி மாலை, சகலகாலாவல்லி மாலை என்னும் சரஸ்வதி தோத்திரம் ... | 0 | 3 | 0 |
| திருவாரூர் நான்மணிமாலை ... | 0 | 1 | 0 |
| திருவெங்கைக்கலம்பகம் ஷ டி உலா ... | 0 | 3 | 6 |
| பழமலையந்தாதியுரை ... | 0 | 3 | 0 |
| சீகாளத்திமான்மியம் (வசனம்) ... | 0 | 2 | 0 |
| சிவப்பிரகாசசுவாமிகள் வரலாறு ... | 0 | 2 | 0 |
| இஷ்டலிங்க அபிஷேகமாலை, நெடுங்கழிநெடில், குறுங்கழிநெடில், நிரஞ்சனமாலை, கைத்தலமாலை, இஷ்டலிங்கவகவல் (நூதன பதிப்பு) ... | 0 | 1 | 6 |
| புள்ளிருக்குவேளூர்க்கலம்பகம் ஷ டி தேவாரத்துடன் ... | 0 | 1 | 6 |
| இஷ்டலிங்கவகவல் (தனி) ... | 0 | 0 | 6 |

## வேறு சுத்த பதிப்பு.

(உயர்ந்த காகிதம்.)

| | | | |
|---|---|---|---|
| விநாயகபுராணம் வசனம் படத்துடன் ... | 2 | 0 | 0 |
| கந்தபுராணம் செய்யுள் 2-வாலியம் (நாவலர்) ... | 6 | 0 | 0 |
| வில்லிபுத்தூராழ்வார் பாரதம் கவி (நாவலர்) ... | 3 | 8 | 0 |
| ஸ்ரீவால்மீகிராமாயணம் வசனம் 7-காண்டமும் 4-வாலியம் | 21 | 0 | 0 |
| பெரியபுராணம் செய்யுள் (நாவலர்) ... | 4 | 0 | 0 |
| ஷை வசனச் சுருக்கம் (நாவலர்) ... | 1 | 4 | 0 |
| ஷை வசனம் படத்துடன் ... | 2 | 0 | 0 |
| திருவிளையாடற்புராணம் வசனம் படத்துடன் ... | 2 | 0 | 0 |
| ஷை வசனச் சுருக்கம் (நாவலர்) ... | 1 | 4 | 0 |
| பட்டணத்தார் பாடலுரை புராண வசனச் சுருக்கம் ... | 1 | 12 | 0 |
| தனிப்பாடல் உரை முதல் பாகம் ... | 1 | 8 | 0 |
| ஷை 2-வது பாகம் ... | 1 | 8 | 0 |
| அருணசலப்புராணம் உரை படத்துடன் ... | 0 | 12 | 0 |
| தாயுமானவர்பாடல் (நாவலர்) ... | 1 | 0 | 0 |
| ஷை வேறுபதிப்பு ... | 0 | 12 | 0 |
| ஷை வேறுபதிப்பு ... | 0 | 8 | 0 |
| தோத்திரக்கொத்து (90) புத்தகங்கள் சேர்ந்தன ... | 0 | 10 | 0 |
| நைடதம் மூலமும் உரையும் படங்களுடன் ... | 2 | 0 | 0 |
| விநோதரசமஞ்சரி ... | 1 | 2 | 0 |
| திருக்குறள் பரிமேலழகருரை (நாவலர்) ... | 4 | 0 | 0 |
| ஷை வடிவேலு செட்டியார் அச்சிட்டது 2வாலியம் | 6 | 0 | 0 |
| திருக்குறள் மூலபாடம் ... | 0 | 4 | 0 |
| நளவெண்பா மூலம் ... | 0 | 4 | 0 |
| கந்தபுராணச் சுருக்கம் மூலமும் உரையும் ... | 2 | 8 | 0 |
| நாலடியார் மூலமும் உரையும் ... | 1 | 2 | 0 |
| நானசீவவாதக்கட்டளை (குறிப்புரையுடன்) ... | 0 | 4 | 0 |
| நீதிநூற்றிரட்டு இதில் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், உலகநீதி, நல்வழி, விருத்தியுரையும், ஔவையார் சரித்திரமும் சேர்ந்தது ... | 1 | 2 | 0 |
| ஸ்ரீ குமாரதேவர் சாஸ்திரக் கோவை ... | 0 | 10 | 0 |
| அஷ்டப்பிரபந்தம் மூலம் ... | 0 | 6 | 0 |
| குடும்பசம்ரக்ஷணி வசனம் ... | 2 | 0 | 0 |
| தஞ்சைவாணன் கோவை உரையுடன் ... | 1 | 0 | 0 |
| ஸ்ரீராமர் அஸ்வமேதயாகம் வசனம் படத்துடன் ... | 1 | 0 | 0 |
| பரமசாம்பிராஜ்ய கல்பதரு ... | 1 | 0 | 0 |
| ஜெயங்கொண்டார்சதகம் திருமுகவிலாசம் ... | 0 | 2 | 0 |
| இங்கிதமாலைவிருத்தியுரை ... | 0 | 10 | 0 |
| குசேலோபாக்கியானம் (குறிப்புரையுடன்) ... | 0 | 6 | 0 |
| சோணசைலமாலையுரை சிவநாமமகிமையுரை ... | 0 | 5 | 0 |
| அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) ... | 0 | 2 | 0 |

